


**May- June 2017**



எழும்பிப் பிரகாசி, உன் ஒளி வந்தது.

ஏசாயா.60:1

# அக்கினிக்குஞ்சு

மீட்பர் கிறிஸ்து இயேசுவின் நாமத்தில் வாழ்த்துக்கள்.

அரையாண்டின் அண்மைக்கு வந்து விட்டோம். என் பால்யவயதில் வருடங்கள் ஆமைவேகத்தில் நகர்ந்தது போலவும், தற்காலத்தில் வேகமாய் செல்லும் மகிழுந்து போலவும் காலங்கள் வேகமாய் ஓடுவதாய் உணர்கின்றேன். திரும்பிப் பார்த்து கைசைக்க முன்புதாகவே காதருந்தவர் கடந்து போய் விடுகின்றார்.

இது நமக்கொரு உண்மையை உரக்கச் சொல்லி நிற்கின்றது. அத்தி மரத்தின் உவமையினால் நான் வருவதையறிந்து கொள்ளுங்கள் என்று நம்முடைய இரட்சகர் நமக்கு அறிவுறுத்தியிருப்பதை மறந்து விடாதிருங்கள்.

மேமாதம் 16ம்திகதியில் இருந்து இலங்கையில் மடு மற்றும் கொழும்பு,நுவரெலியாவிலும், 25-27 வரை திருப்தூர் அக்கினி முகாமிலும், 28ம் திகதி சென்னையிலும் தேவனுடைய ஊழிங்களை நிறைவேற்றச் செல்லுவேன். முடிந்தவரை உங்கள் ஜெபங்களில் என்னை நினைத்துக் கொள்ளுங்கள்.

இலங்கையில் மன்னார் மாவட்டத்தில் மடுறோட்டில் ஒரு ஆலயத்தை கட்டவும், தேவ ஊழியனுடைய கையைப் பலப்படுத்தவும் தேவன் கிருபை செய்திருக்கின்றார். ஒருவேளை இந்த ஊழியத்திற்காக உதவி செய்ய ஏவப்படுவீர்களானால் எங்கள் முகவரிக்கு காசோலையாக அனுப்பி வையுங்கள். அதற்கான வரிச்சலுகை ரசீதுகள் இந்த வருடத்தின் முடிவில் உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

எல்லா சபைப் போதர்களுக்காவும் ஜெபியுங்கள். நெருப்பாற்றில் நின்று போராடி ஊழியம் செய்யும் எல்லா ஊழியர்களையும் தேவன் பலப்படுத்துவாராக. உத்தம ஊழியர்களை கனப்படுதுங்கள். ஊழியத்தில் உற்சாகமாய் ஈடுபடுங்கள். தேவனாகிய கர்த்தர் இயேசு சீக்கரம் வருகின்றார். மாறாநாதா!

அன்புடன்
போதகர் மனோ தர்மலிங்கம்



**ஊழிய நோக்கம்:**

ஊழியர்களை எழுப்பி சபைற்ற இடங்களில் சபை நிறுவுதல்.

நற்செய்திப் பணியார்களைப் பயிற்றுவித்து அனுப்புதல்

நற்செய்திப் பணியாளர்களைத் தாங்குதல்.

இயேசுவை அனைவருக்கும் சொந்தமாக்குதல்.


**Our address:**

**MCFWC**
**5155, Spectrum way**
**Unit 7**
**Mississauga , ON**
**L4W 5A1**

**Email:**
**pastormano@**
**praisetabernacle.org**

**Phone:**

**416 554 8448**


**கடந்த 26வருடங்களாய் தேவனுடைய வசனத்தை கலப்பில்லா மலும், துப்பரவாயும் அறிவித்து வரும் தேவ திருச்சபை.**






நீர்ப்பாச்சலான தோட்டம் ஒன்றைக் கற்பனை செய்து பாருங்கள். பச்சை யான மரங்கள், படந்து விரிந்த செடி கள்,பூத்துக் குலுங்கும் பூஞ்செடிகள், தேனெடுக்க சூழன்று கொண்டிருக் கும் தேனீக்கள், மலக்கு மலர் தாவிக் கொண்டிருக்கும் வண்ணத்துப் பூச்சி கள். இப்படித்தான் இருக்கும். தேவ னுடைய வசனம் நம்முடைய வாழ் வைக் குறித்து வைத்திருக்கும் திட்டமும் இதுவே. பரிசுத்த ஆவியானவர் ஏசாயா தீர்க்கன் மூலம் நம்முடைய வாழ்வில் தேவனுடைய கரத்தின் கிரி யைகளை எழுதித் தந்திருக்கின்றார்.

கிறிஸ்துவானவர் உலர்ந்து போன நம்முடைய வாழ்க்கையை மாற்றவே உலர்ந்து போன அந்தச் சிலுவை மர த்திலே நம்முடைய பாவங்களைச் சுமந்து தன்னுடைய ஜீவனைக் கொடு த்தார். உலர்ந்து போன எலும்புகளுக்குச் உயிர்கொடுப்பதற்காக தேவனுடைய ஊழியர்களின் வாயிலே வார்த்தையை வைக்கின்றார். நாம் உண் மையுள்ள தேவனுடைய வார்த்தைகளை நம்முடைய சூழ்நிலைகளில் பேசும்போது அவைகள் அந்தச் சூழ் நிலையை மாற்றியமை க்கின்றன. இதனையே ஏசே 37:3ல் வாசிக்கின்றோம். இலங்கையில் நான் பிறந்த கிராமம் சேற்றுக்குளம். இங்கே இரண்டு குளங்கள் உண்டு. மாளிகைத்திடல் என்று ஒன்றும், அதனருகே சேற்றுக்குளம் என்று இன்னொன்றுமாக அருகருகே அமைந் திருப்பதிருப்பதால் என் கிராமம் எப்போதும் பச்சையாவே காட்சியளிக்கும். அதுவும் விசேடமாக மார்கழி மாதம் தொடங்கி மாசி ஆரம்பம் வரை எங்கு பார்த்தாலும் பரவி விரி ந்து கிடக்கும் வயல்வெளிகளின் பச்சையான போர்வை மனதைக் கொள் ளையிடும். நன்னீர் காணப்படும் இடத்தில் பசுமை காணப்படுவது போல தேவகிருபை காணப்படும் இடத்தில் கொழுமை சிறந்திருக்கும். தேவன் அதனை உங்கள் வாழ்வில் செய்திட சித்தமுள்ளவராய் இருப்பதால் தான் அவர் இந்த வாக்கை

நமக்குத் தந்திருக்கின்றார். கிறிஸ்துவின் இரத்தம் சிலுவையில் சிவப்பாய் வடிந்ததினால் உங்கள் வாழ்வில் பசுமை பச்சையாய் தோன்றுகின்றது. வறுமை என்பது கறுப்பு வர்ணம். செழிமை என்பது பச்சை வண்ணம். உங்கள் சாபத்தை ஆசீர்வாதமாக மாற்ற மீட்பர் கிறிஸ்து சிலுவை யில் தொங்கினார். பாவம் அறியாத அவர் உங்களுக்காகவும், எனக் காகவும் பாவமானார். இந்த மீட்பின் இரகசியம் பெரிதானலும் ஒரு பெரிய விடுதலையை தேவன் சிலுவையில் உண்டு பண்ணினார். இதனையே அப்.பவுல் ' அவர் உங்களை சகல ஆவிக்குரிய ஆசீர்வாதங்களினாலும் நிரப்பியிருக்கின்றார்" என்று எபேசியர் 1:3ல் குறிப்பிடுகின்றார். சிலுவை மரணத்தினால் மனிதனுக்குண்டான வாழ்வின் மகத்துவம் என்ன தெரியுமா?. பாவத்தின் பிடியில் இருந்து நாம் விடுவிக்கப்பட்டு, தேவனுடைய பிள்ளைகளின் சுதந்திரத்திற்கு நாம் உட்பட்டவர்களாகின்றோம்.

இதே வசனத்தில் காணப்படும் அடுத்த வசனத்திற்கு கவனத்தைச் செலுத்துவோமேயானால் நீர்ப்பாச்சலான தோட்டம் என்ற வார்த்தையை தீர்க்கதரிசி உவகப் படுத்துகின்றார். காரணம் கர்த்தர் மேல் நம்பிக்கை வைத்து கர்த்தரையே நம்பிக்கையாய் கொண்டிருக்கிற மனிதன் நீர்ப்பாச்சலான தோட்டத்தைப் போலிப்பான் என்று ஏரேமியா 17: 6 சொல்லுகின்றது. தேவனுடைய வார்த்தையானது நல் நீருக்குச் சமானம். தண்ணீர்த்தாகமுள்ளவனுக்கு குளிர் நீர் எவ்வளவு இன்பமானதோ அவ்வாறே வறட்சியுள்ள மனிதனுக்கு தேவனுடைய வார்த்தையும் காணப் படுகின்றது. வறண்ட பூமியில் இறங்கும் நீர் மரத்தின் வேரை நனைத்து பசுமையுண்டாக்கி, பூத்துக் குலுங்கி, காய்க்க உதவுமாப் போல, கர்த்தருடைய வசனத்தைத் தியானம் செய்யும் மனிதனின் வாழ்வும் இருக்கும். இதையே தான் சங்கீதக்காறன் என்றழைக்கப்படும் தாவீது நல்ல நீர்கால்கள் ஓரமாய் நடப்பட்ட மரத்தைப் போலிப்பான் என்று 1ம் சங்கீதத்தில் குறிப்பிடுகின்றார்.

உங்கள் வாழ்வில் ஒருவறட்சியோடு இதனை வாசித்துக் கொண்டிருக்கின்றீர்களா?. எவ்வளவு தான் உழைத்தாலும் முன்னேற்றம் இல்லை என்று ஒரு நிதர்சனம் உங்கள் வாழ்வில் உண்டா?. அவ்வாறாயின் ஏன் நீங்கள் தேவனை அண்டிச் சேராக் கூடாது. அவருடைய வார்த்தைகள் யாவும் கிறிஸ்து இயேசுவுக்குள் ஆம் என்றும் ஆமென் என்றுமே இருக்கின்றன. மாத்திரமல்ல, மனம் மாற தேவன் ஒரு மனிதன் அல்ல (1சாமு 15:29) என்று வேதம் சொல்லுகின்றது. உங்கள் வறட்சியான வாழ்வில் விளக்கேற்றவே கிறிஸ்து உங்களுக்காக தியாக தீபமானார். சிலுவையிலே தன்னைத் தான் ஒப்புக் கொடுத்து நம்முடைய பாவங்களையும், அநியாங்களையும் தன் மேல் சுமந்து கொண்டதினால் நமக்கு அவர் மூலமாய் விடுதலையும், ஆசீர்வாதமும் உண்டாகின்றது. இந்தச் காய்ந்து போன இந்தச் சிலுவையே உங்கள் வாழ்வை மாற்ற வல்ல மதுரமரமாகும்.

சிலுவையைப் பற்றிய உபதேசம் கெட்டுப் போகிறவர்களுக்கு பைத்தியமாய் இருக்கும், இரட்சிக்கப்படுகின்ற நமக்கோ அது தேவபெலனாய் இருக்கும் என்று 1கொரி 1:18ல் பரிசுத்த பவுல் உங்களை அழைக்கிறார். ஆமென்.

# How to Be Filled and Controlled By the Holy Spirit- Kathryn Kuhlman

*It was on July 4, 1948 that the first Kathryn Kuhlman "miracle service" was held at Carnegie Hall, North Side – the first of many such services to be held regularly over the years of her ministry in Pittsburgh. Kathryn Kuhlman moved from Franklin, Pennsylvania to Pittsburgh, after the roof of Faith Temple in Sugar Creek (where she had been conducting services since l947) fell in under the weight of the greatest snowfall in area history on Thanksgiving Day, l950. And it was in l954 that she founded The Kathryn Kuhlman Foundation.*

*Kathryn Kuhlman was once asked, "What do you regard as the ultimate goal of your ministry?" To which she replied: "MY PURPOSE IS THE SALVATION OF SOULS. Divine healing is secondary to the transformation of a life.*

*Kathryn Kuhlman was born-again at the age of fourteen in the Methodist Church of Concordia, Missouri. In her own words, she said of that experience and her ministry: "It was the beginning of something that changed my whole life. All that I knew was the glorious new birth experience, and (as a young girl) when I went to preach to those farmers in Idaho, I could tell them nothing more than what I had experienced: that Jesus would forgive their sins. So, I preached salvation all across Idaho to every farmer, to everyone who would listen; but gradually I began to realize there was someone besides the Father and the Son – there was this Third Person of the Trinity. I felt compelled to know more regarding Him and, as I began searching and studying God's Word, I could see that divine healing also was in the atonement."*

*"It was in Franklin, Pennsylvania in the old Billy Sunday Tabernacle. I had gone to Franklin by faith (l946), not knowing what I would find there. It was in the third service, as I was preaching on the Holy Spirit, sharing with the people the little that I knew about that Third Person of the Trinity – a woman stood up and testified to her healing of a tumor. That was the first healing that took place in this ministry. It*

*happened without the laying on of hands, without any special prayer; it just happened as a woman sat in the audience while I was preaching on the power of the Holy Spirit. Since that time, there have been thousands and thousands of healings. WHAT IS THE SECRET?It is the Third Person of the Trinity – the Holy Spirit!"*

*Kathryn Kuhlman always pointed men and women to Jesus, emphasizing that the greatest miracle was the transformation of a life. She often said: "I believe in miracles with every atom of my being... because I believe in God – but Kathryn Kuhlman has nothing to do with the healing of sick bodies.I have no healing power. It's the power of God that dœs the healing. The only part I have in it is making Jesus real to the hearts of men and women. Any results there might be in this life of mine, is not Kathryn Kuhlman. It's the Holy Spirit; IT'S WHAT THE HOLY SPIRIT DŒS THROUGH A YIELDED VESSEL."*




# SUNDAY SCHOOL

loving people
reaching the world
knowing CHRIST

Every Sunday @ 9:30 AM
Trained, Equipped and anointed teachers are in this ministry.

**பிரதி புதன்கிழமை காலை 10:30 மணிக்கு விண்ணப்ப ஜெபமும், பிரதி வியாழக்கிழமை மாலை 7:30 மணிக்கு வேதப்படிப்பும் நடைபெறுகின்றது!**



# The Secret Behind Jack Hayford's Success

*Jack Hayford is arguably the most-respected Pentecostal leader of our generation.2005,Christianity Todaycalled him "the Pentecostal Gold Standard" on its cover. (By the way, they pulled that from a quote from me used in the article. When the author interviewed me, that was my genuine assessment of this great man of God. I never imagined the magazine's editors would decide it made a great cover line!)*

*Apart from God's grace, there is another reason Jack Hayford has been successful in the ministry—Anna Marie Hayford, his wife of 62 years, whom they laid to rest last week in Los Angeles. I had the privilege of attending her three-hour-long memorial service at a packed-out Church On The Way in Van Nuys, California. Family members and friends shared variations of the same statement: There never would have been a Jack Hayford (as we know him) or The Church On The Way without Anna's steady influence.*

*Because of my long and close relationship with the Hayfords, I knew firsthand that what they said about her was true. She was simple, practical and comfortable in any setting—whether spending time with ordinary people like the farmers she grew up with In Nebraska or attending a state dinner with her famous husband. Jack and Anna's oldest daughter, Rebecca Bauer, summed it up best: "She was simple, but classy," adding that her mother brought sparkle wherever she went. And although she was known for her quiet demeanor, the family knew she was sometimes "sassy" in an endearing sort of way.*

*Anna was diagnosed with an aggressive cancer a little more than a year ago. That she lived this long was a miracle, somethingI wrote aboutAugust. When she breathed her last on March 8 at 3 a.m., her husband held her hand. At the same time on the east coast, I thought about Anna and decided to call later that day to see how she was doing.*

*At her memorial service, Pastor Hayford, in his inimitable style, told mourners*

*how he and Anna fell in love as Bible college students in the early 1950s. He even spoke of how they locked fingers in a special way the first time they held hands. As she lay in a coma, dying, they locked fingers the same way once again as she passed into eternity.*

*"Anna made me the most blessed husband who ever lived," he said. "I could have had no greater gift for the life we led, and I can't imagine a more fulfilling life than we led."*

*He also shared a page from his journal on Feb. 7—29 days before she died—in which the Lord told him to prepare to "escort your lady into My presence."*

*For those accustomed to hearing Pastor Hayford expound on truths in the Word, this journal entry, in which he described the love of his life, was a peek into his heart.*

*I could write so much more about Anna Hayford, including quotes of the many warm, loving memories shared at her funeral. Suffice it to say she was a woman who loved God and served Him, her family and her church with all her heart. She will be remembered long for the legacy she left. Isn't that what each of us should want when our time on Earth ends?*

*With his permission, I will close by sharing what Pastor Hayford wrote in his journal on Feb. 7, 2017:*

***From this day, escort your lady into My presence.***
***I gave her to you for the mission, journey, joy, family and fruitful service of My people and the advance of My kingdom.***
***You have been faithful to one another just as you have been to My call and the work it has required.***
***Your journey together on Earth is drawing to a close.***
***I will shortly take her into my eternal presence; give yourself and your time to her lavishly—preparing for the joy that is set for her.***

***I will not leave you without comfort and care when she leaves; indeed, as you have clearly seen, I have been preparing the way for your tomorrows until I bring you into My eternal presence. Rest and rejoice—your God and Savior are with you and moving before you.***

Thanks : Charisma Magazine



# என் கண்பார்வையை காத்துவரும் கர்த்தர்!

எனக்கு சுமார் *30* வயது இருக்கும்போது கண் பார்வை சற்று மங்கலாக தெரிந்தது. கண்ணை செக் செய்து ஒரு கண்ணாடி போட்டுக் கொண்டேன். காட்சிகள் எல்லாமே மிக மிகதெளிவாக தெரிந்தது அனால் சில நாட்களில் ஆண்டவர் என்னோடு இடைபடவே கண்ணாடி போடுவதை நிறுத்திவிட்டேன்.

அந்நேரம் பல நண்பர்கள் என்னிடம்"ஒரு நாளில் சுமார் ௮ மணி நேரம் கணினி முன் அமர்ந்திருக்கும் எனக்குகண்ணாடி போட வேண்டிய நேரத்தில் போடவில்லை என்றால் கொஞ்சம் கொஞ்சமாக கண் பார்வையே போய்விடும்" என்று அதிகமாக பயம்காட்டினார்கள்

ஆனால் நானோ "ஆண்டவர் என்னை, எதை/ எவ்வளவு தூரத்தில்/ எப்படி பார்க்கவேண்டும் என்று வைத்திருக்கிறாரோ அப்படியே நான் பார்க்க விரும்புகிறேன். கண்ணாடி என்று ஒன்றை போட்டுகொண்டு என் கண்ணை நானே கூர்மையாக்கி, தேவன் தெளிவாக பார்க்கவேண்டாம் என்று எண்ணுவதை நான் தெளிவாகபார்க்கவிரும்பவில்லை என்று சொல்லி விட்டுவிட்டேன்.

ஆனால் இன்று சுமார் *19* வருடங்கள் ஆகிறது நானும் அதேபோல் தினமும் ௮-௧௦ மணிநேரம் கணினியை பார்த்து வேலை செய்கிறேன் என் கண்களில் எந்த பாதிப்பும் ஏற்ப்படவில்லை.

ஆனால் கடந்த ஒருமாதத்திற்கு முன்னர் மீண்டும் எல்லா எழுத்துக்களும் பார்க்க முடியாதபடிமங்கலாக தெரிய ஆரம்பித்தது அதனால் வேலையில்ஒரு சின்ன மிஸ்டேக் கூட ஆகிவிட்டது. எனவே வயதாகிவிட்டது இனிகண்ணாடி போட்டுவிடலாமா என்றுசற்றே தடுமாறிய நான் மீண்டும் விசுவாசத்தை பிடித்துகொண்டு "எனக்கு /என் வேலைக்கு எப்படியான பார்வை தேவை என்பதை தேவன் அறிவார் அதை நிச்சயம் அவரால் தர முடியும் முடிந்தவரைநான் கண்ணாடி போடவே மாட்டேன்" என்று உறுதியாக விசுவாசித்து கண்ணாடி போடும் எண்ணத்தை உதறினேன்.

சில நாட்களிலேயே கண் பார்வை நல்ல நிலையை அடைந்தது.

**மாற்கு** *9 : 2 3* இயேசு அவனை நோக்கி: நீ விசுவாசிக்கக்கூடுமானால் ஆகும், விசுவாசிக்கிறவனுக்குஎல்லாம்கூடும்என்றார்.

**உறுதியான விசுவாசத்துக்கு முன்னால் உலகமும் அதன் நடப்பும் எல்லாமே ஒரு மாயை!**

தேவனால் எல்லாவற்றையும் சரியாக மாற்றிவிட முடியும் என்ற உண்மையை அறிந்தால் எந்த சூழ்நிலையிலும்நாம் தடுமாறவே மாட்டோம்!

**மத்தேயு க௯:உ௬**தேவனாலேஎல்லாம்கூடும்என்றார்.

என் கண்பார்வையை காத்துவரும் கர்த்தர்!
எனக்கு சுமார் ௩௦ வயது இருக்கும்போது கண் பார்வை சற்று மங்கலாக தெரிந்தது. கண்ணை செக் செய்து ஒரு கண்ணாடி போட்டுக் கொண்டேன். காட்சிகள் எல்லாமே மிக மிக தெளிவாக தெரிந்தது அனால் சில நாட்களில் ஆண்டவர் என்னோடு இடைபடவே கண்ணாடி போடுவதை நிறுத்திவிட்டேன்.
அந்நேரம் பல நண்பர்கள் என்னிடம் "ஒரு நாளில் சுமார் ௮ மணி நேரம் கணினி முன் அமர்ந்திருக்கும் எனக்கு கண்ணாடி போட வேண்டிய நேரத்தில் போடவில்லை என்றால் கொஞ்சம் கொஞ்சமாக கண் பார்வையே போய்விடும்" என்று அதிகமாக பயம்காட்டினார்கள்

ஆனால் நானோ "ஆண்டவர் என்னை, எதை/ எவ்வளவு தூரத்தில்/ எப்படி பார்க்கவேண்டும் என்று வைத்திருக்கிறாரோ அப்படியே நான் பார்க்க விரும்புகிறேன். கண்ணாடி என்று ஒன்றை போட்டுகொண்டு என் கண்ணை நானே கூர்மையாக்கி, தேவன் தெளிவாக பார்க்கவேண்டாம் என்று எண்ணுவதை நான் தெளிவாக பார்க்கவிரும்பவில்லை என்று சொல்லி விட்டுவிட்டேன்.

ஆனால் இன்று சுமார் 19 வருடங்கள் ஆகிறது நானும் அதேபோல் தினமும் ௮-௧௦ மணிநேரம் கணினியை பார்த்து வேலை செய்கிறேன் என் கண்களில் எந்த பாதிப்பும் ஏற்ப்படவில்லை.

ஆனால் கடந்த ஒருமாதத்திற்கு முன்னர் மீண்டும் எல்லா எழுத்துக்களும் பார்க்க முடியாதபடி மங்கலாக தெரிய ஆரம்பித்தது அதனால் வேலையில் ஒரு சின்ன மிஸ்டேக் கூட ஆகிவிட்டது. எனவே வயதாகிவிட்டது இனி கண்ணாடி போட்டுவிடலாமா என்று சற்றே தடுமாறிய நான் மீண்டும் விசுவாசத்தை பிடித்து கொண்டு "எனக்கு /என் வேலைக்கு எப்படியான பார்வை தேவை என்பதை தேவன் அறிவார் அதை நிச்சயம் அவரால் தர முடியும் முடிந்தவரை நான் கண்ணாடி போடவே மாட்டேன்" என்று உறுதியாக விசுவாசித்து கண்ணாடி போடும் எண்ணத்தை உதறினேன்.

சில நாட்களிலேயே கண் பார்வை நல்ல நிலையை அடைந்தது.

மாற்கு *9:23* இயேசு அவனை நோக்கி: நீ விசுவாசிக்கக்கூடுமானால் ஆகும், விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும் என்றார்.

உறுதியான விசுவாசத்துக்கு முன்னால் உலகமும் அதன் நடப்பும் எல்லாமே ஒரு மாயை!

தேவனால் எல்லாவற்றையும் சரியாக மாற்றிவிட முடியும் என்ற உண்மையை அறிந்தால் எந்த சூழ்நிலையிலும் நாம் தடுமாறவே மாட்டோம்!

மத்தேயு *19:26* தேவனாலே எல்லாம் கூடும் என்றார்.



# அறிந்து கொள்வோம்

1.நான் அவர்களுக்கு சிங்கத்தை போல் இருப்பேன்.சிவிங்கியை போல் வழியருகே பதிவிருப்பேன் என்று கர்த்தர் யாருக்கு சொல்கிறார்???

2.நாம் எதை செய்யும் போது சோர்ந்து போக கூடாது??

3.சாலொமோன் ராஜாவை அபிஷேகம் செய்தவர்கள் யார்??எந்த இடம்???
4.யார் யார்தாகத்தினால் சோர்ந்து போவார்கள்???

5.அகோலாள்,அகோலிபாள் என்பதின் பொருள் என்ன??

6.அவன் எரிந்து பிரகாசிக்கிற விளக்காய் இருக்கிறான் என்று இயேசு யாரை குறித்து கூறினார்??

7.சாலொமோனுடைய நாட்கள் நீடித்திருக்க தேவன் கொடுத்த கட்டளை என்ன???

8.நான் உயிரோடு இருப்பதை பார்க்கிலும் சாகிறது நலம் என்று கூறியது யார்??

9.யாக்கோபு ஓடிப் போனதை எத்தனை நாள் கழித்து லாபானுக்கு அறிவித்தார்கள்??

10.எந்த இடத்தில் கர்த்தர் சாலொமோனுக்கு தரிசனமாகி ஞானத்தை அளித்தார்???

11.எழுபது ராஜாக்களை கை கால்களின் பெருவிரல்களை தரித்த ராஜா யார்???

12.எருசலேம் தேவாலயம் கட்ட தேவையான மரத்திற்கு சாலொமோன் என.த ராஜாவிடம் வேண்டுதல் செய்தார்??

13.இஸ்ரவேல் புத்திரர் எகிப்திலிருந்து புறப்பட்டு எத்தனை வருடத்தில் தேவாலயம் கட்ட தொடங்கப் பட்டது??

14.கானானில் எத்தனை ஜாதிகளை அழித்து கர்த்தர் அந்த தேசத்தை இஸ்ரவேலி ற்கு சுதந்திரமாக பங்கிட்டு கொடுத்தார்???

15.நாவின் அதிகாரத்தில் உள்ளவை எவை?
கசூ. என்னிடத்தில் நற்கிரியை செய்திருக்கிறாள் என்று ஒரு ஸ்திரியை இயேசு யாருடைய வீட்டில் இருந்து கூறினார்???

17. நான்கு சுவிசேஷங்களில் ஒன்றில் மட்டும் கூறப்பட்டுள்ள அற்புதம் எது??எந்த சுவிஷேசம்??

18.சாலொமோன் தன் அரண்மனையை முழுவதையும் கட்டி முடிக்க எத்தனை வருஷம் ஆனது??

19.சாலொமோன் ராஜா தேவாலய வாசல் மண்டபத்தில் நிறுத்திய இரண்டு தூண்களின் பெயர் என்ன???

20.எந்த மிருகம் தும்மினால் ஒளி வீசும்??

**sent your answer to : Praise Tabernacle,**
**5155,Spectrum Way, Unit 7, Mississauga ON L4W 5A1**

# Books of the Bible

```
J J R Z B Y S R E B M U N W F
V O Z E M T I M O T H Y I C W
L E E P N O Z H A I D A B O P
S L H H W E H T T A M C N K S
N S N A I N O L A S S E H T A
O S A N P R O V E R B S D S L
I N U I B G S I S E N E G B M
T A H A I R A H C E Z S T N S
A I S H S N A I H T N I R O C
L T O H O S E A S E G D U J E
E A J D E U T E R O N O M Y N
V L M T F C H R O N I C L E S
E A E W X S N A I S S O L O C
R G Y E H E B R E W S Y G B Q
A M O S S N A I S E H P E A X
```

AMOS
CHRONICLES
COLOSSIANS
CORINTHIANS
DEUTERONOMY
EPHESIANS
GALATIANS
GENESIS
HEBREWS
HOSEA
JOEL
JOSHUA
JUDGES
MATTHEW
NUMBERS
OBADIAH
PROVERBS
PSALMS
REVELATIONS
THESSALONIANS
TIMOTHY
ZECHARIAH
ZEPHANIAH

# பொறாமை, பொருளாசையும் முரட்டாட்டமும்



காயீன், பிலேயாம், கோரா ஆகிய மூன்று மாதிரிகளைப் பழைய ஏற்பாட்டிலிருந்து யூதா தருகிறார்.

காயீனுடைய பிரச்சனை பொறாமையாக இருந்தது. அவனுடைய இளைய சகோதரனின் பலியின் மீது அக்கினியை அனுப்பி தேவன் அதை ஏற்றுக் கொண்டதால், தம்பியின் மீது பொறாமை ஏற்பட்டது. நீங்கள் ஏதாவது ஒரு சகோதரனின் ஜீவியம் மற்றும் ஊழியத்தின் மீது (ஒரு வேளை அவர் உங்களைவிட இளையவராக இருக்கலாம்) தேவன் அக்கினியையும், அபிஷேகத்தையும் தருவதைக் கண்டு, பொறாமைப்படுகிறீர்களா? அப்படியானால், நீங்கள் காயீனுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்கு யார் மீதாவது பொறாமை இருக்குமானால், நீங்கள் அவரிடத்தில் அன்புகூரவில்லை என்பது ஊர்ஜிதமாகிறது. இளைய சகோதரர்கள் அபிஷேகிக்கப்படுவதையும், அக்கினியாய் இருப்பதையும், தங்களைக் காட்டிலும் ஆவிக்குரிய ரீதியில் முன்னேறிச் செல்வதையும் கண்டு, மூப்பர்கள் பொறாமை கொள்ளக்கூடும். நீங்கள் பொறாமை உள்ளவர்களாகும் போது, பிசாசுடன் ஐக்கியப்பட்டு விடுகிறீர்கள். தேவபக்தியுள்ளவன் அத்தகைய இளைய சகோதரனை உற்சாகப்படுத்துகிறார். அவர் கூட்டத்தில் அமர்ந்துகொண்டு, அந்த இளைய சகோதரனைப் பிரதான பேச்சாளராக இருக்கட்டும் என விட்டுவிடுவார்.

கல்வி அறிவு இல்லாத ஒரு தொழிலாளியின் மகன் கல்லூரியில் படித்துப் பட்டம் பெறுவதைச் சிந்தித்துப் பாருங்கள். அந்தத் தகப்பன் தன்னுடைய மகனின் பட்டமளிப்பு விழாவிற்காகக் கல்லூரிக்குச் செல்கிறான். மகன் தன்னைவிடப் படிப்பில் உயர்ந்துவிட்டதற்காக அவன்மீது பொறாமை கொள்வானா? இல்லை. என்ன காரணம்? ஏனெனில் அவன் ஒரு தகப்பனாயிருந்து, மகனை நேசிக்கிறான். நீங்கள் ஒரு சபையில் மூப்பனாய் இருந்து கொண்டு, சபையிலுள்ள எவர்மீதாவது பொறாமை கொள்வீர்களானால், நீங்கள் ஒரு தகப்பனாய் இல்லை என்பதே அதற்கான காரணமாகும். ஓர் உண்மையான தகப்பன் தன் மகனை பி.எச்டி வரைப் படிக்க உற்சாகப்படுத்துவான். ஏழைத் தொழிலாளிகள் தங்கள் பிள்ளைகள் கற்றுத் தேறுவதைக் கண்டு மகிழ்ச்சியடைவதை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் அதைப் போலவே சபையிலுள்ள இளைய சகோதரர்களை முன்னுக்கு உந்தித் தள்ள ஆர்வம் கொண்ட மூப்பர்களைக் காண்பது அபூர்வமாகவே உள்ளது. அதற்கு மாறாக, தங்கள் சிங்காசனங்களில் வீற்றிருந்து கொண்டு, அபிஷேகிக்கப்பட்ட சகோதரனைப் பொறாமை கண் கொண்டு பார்க்கிற மூப்பர்களை நான் கண்டிருக்கிறேன். தங்களுடைய அதிகாரத்திற்கு அவர்களை ஓர் அச்சுறுத்தலாக எண்ணி, முடிந்த அளவிற்கு எல்லா விதத்திலும் அவர்களை நசுக்குகிறார்கள். இன்றைய கிறிஸ்தவ வட்டாரத்தில் தகப்பன்மார்கள் வெகு சிலரே உள்ளனர் என்பதே அதன் பரிதாபமான நிலையாகும். அவர்களெல்லாரும் தங்களுக்கானவைகளைத் தேடுகிறவர்களாவர். மெய்யான தேவபக்தியுள்ள ஒருவன் தன்னுடைய இளைய சகோதரர்கள் முதிர்ச்சி அடைவதையும், தன்னுடைய ஊழியத்தைக் காட்டிலும் அதிக அபிஷேகமுள்ள ஊழியத்தை அவர்கள் பெற்றிருப்பதையும் கண்டு பெருமகிழ்ச்சிக் கொள்ளுவான். அவர்கள் அத்தகைய இளைய சகோதரர்களை முன்னுக்குத் தள்ளி, தங்களைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு பின்னணியிலேயே இருந்து கொள்வார்கள். நீங்கள் தேவபக்தியுள்ள மூப்பராய் இருக்க விரும்பினால், பொறாமைபிடித்த காயீனைப் போல இருக்க வேண்டாம்.

யூதா குறிப்பிடும் அடுத்த நபர் பிலேயாம் ஆவான். அவனது பிரச்சனைப் பொருளாசையும், பண ஆசையுமாகும். பிலேயாம், மேசியாவின் வருகை உட்பட, பல நல்ல காரியங்களைக் குறித்துப் பேசினான் (எண் உச:கஎ). அதே சமயம் அவன் பணத்துக்குப் பின்னாலும் ஓடினான். இன்றுள்ள அநேகப் பிரசங்கிகள் பல அற்புதமான சத்தியங்களையெல்லாம் பேசிவிட்டு, பொருளாசை உள்ளவர்களாய் இருப்பதைப்

போலவே அவனும் இருந்தான். அப்படிப்பட்டப் பிரசங்கிகள் அனைவரும் பிலேயாமின் வழியிலே சென்றவர்கள் ஆவர்.
மூன்றாவதாக, யூதா கோராவைக் குறித்துப் பேசுகிறார். அதிகாரத்திற்கு எதிராகக் முரட்டாட்டம் பண்ணுவதே இவனுடைய பிரச்சனையாகும். கோரா எகிப்திலேயே ஓர் அடிமையாக மரித்திருந்திருப்பான். அவன் இஸ்ரவேலிலே ஒரு தலைவனாவதற்குத் தகுதியற்றவனாகவே தேவன் அவனைக் கண்டார். தேவன் மோசேயைப் பயன்படுத்தி, கோராவை அடிமைத்தனத்திலிருந்து மீட்டு வந்தார். மோசே அவனை உற்சாகப் படுத்தி, அவனுக்கு ஒரு தலைமைப் பதவியையும் கொடுத்தான். இது கோராவின் தலைக்கேறி, பின்பு அவன் மோசேயை எதிர்க்கத் துணிந்துவிட்டான். தேவன் அவனை எப்படி நியாயந்தீர்த்தார் எனப் பாருங்கள். பூமி வாயைப் பிளந்து அவனை விழுங்கிவிட்டது. காயீன் தன்னுடைய இளைய சகோதரன் மீது பொறாமை கொண்டான். ஆனால் கோரா முதிர்ந்த ஆவிக்குரிய தலைவன்மீது பொறாமை கொண்டான். அதுபோலவே, நீங்களும் உங்களை ஓர் ஆவிக்குரிய தலைவனாக எண்ணிக் கொண்டு, பெருமையடைந்து, உங்களை நடத்திப் போஷித்த, பக்தியுள்ள மனிதர்களுக்கு அடங்காதவர்களாக மாறிவிடக் கூடும். ஆனால் தேவன் ஒரு நாளிலே, தாம் யாரை அபிஷேகம் பண்ணினார் என்பதை நியாயப்படுத்துவார். அந்த நாளானது கோராவுக்கு ஒரு துக்ககரமான நாளாக அமைந்தது போலவே உங்களுக்கும் இருந்துவிட முடியும். கிறிஸ்தவ உலகிலே, அதிகாரத்திற்கு எதிராகக் முரட்டாட்டம் பண்ணுதல் என்பது சர்வசாதாரணமாக மாறியிருப்பது ஒரு துர்ப்பாக்கியமாகும். நாம் எந்த ஓர் ஆவிக்குரிய அதிகாரத்திற்கும் எதிர்த்து நிற்கவே கூடாது. நீங்கள் இருக்கும் சபையிலே உங்களால் மகிழ்ச்சியாக இருக்க முடியாவிட்டால், வேறு இடம் தேடிச் சென்றுவிடுங்கள். ஆனால் அங்கேயே இருந்து கொண்டு அங்கிருக்கும் தலைமைத்துவத்துக்கு பிரச்சனையாய் இருக்க வேண்டாம். இல்லையேல், கோராவைப் போலத்தான் உங்களுடைய முடிவும் இருக்கும். நீங்கள் ஒரு குழுவினருடன் ஒத்துப் போக இயலவில்லையென்றால், அவர்களை விட்டுவிட்டு, வேறு இடத்திற்குச் செல்லுங்கள். முடிந்தால் வேறொரு குழுவைத் தொடங்குங்கள்; ஆனால் முரட்டாட்டம் செய்வதை விட்டுவிடுங்கள். இத்தகைய மனிதர்கள் கடலடியில் மறைந்திருக்கும் தாவரங்களுக்கு - மறைந்திருக்கும் பாறைகளுக்கு ஒப்பானவர்களாவர். இப்பாறைகளின் மீது கப்பல்கள் மோதினால் உடைந்துவிடும். இவர்கள் தாங்கள் ஆவிக்குரிய வரங்களைப் பெற்றிருப்பவர்களைப் போல ஜனங்களை ஏமாற்றுகின்றனர்; ஆனால் இவர்கள் மழைதராத மேகங்களைப் போன்றவர்கள் (யூதா 1:12).

எழுதியவர் :சகரியா பூணன்

தாவீதின்

# சங்கீதங்கள்
# தற்போது ஆறு மொழிகளில்
# கிடைக்கின்றது.

ஒவ்வொரு கிறிஸ்தவருக்கும் அருமருந்து!

அழையுங்கள்: பென்ஜமின்

905 614 0209




*Every second Saturday of the month @ 10:00 AM*

# young Adult MINISTRIES

**EVERY SUNDAY @ 11;15 AM....**

**COME, GET BLESS AND INTRODUCE JESUS TO YOUR FRIEND!**




# ஆபத்துக்காலத்தில் துணை!

"தேவன் நமக்கு அடைக்கலமும் பெலனும், ஆபத்துக்காலத்தில் அநுகூலமான துணையுமானவர்" (சங். சகூ:க).

கர்த்தர் உங்களுக்கு துணையாயிருப்பதினாலே பூமி நிலைமாறினாலும், மலைகள் நடுச்சமுத்திரத்தில் சாய்ந்து போனாலும், அதின் ஜலங்கள் கொந்தளித்துப் பொங்கி, அதின் பெருக்கினால் பர்வதங்கள் அதிர்ந்தாலும் நாம் பயப்படோம்" (சங். சகூ:உ,ரு).

ஆபத்துக்காலம் எப்பொழுது வருகிறது என்று நமக்குத் தெரியாது. எப்போது நோய்களும், வியாதிகளும் பற்றிக்கொள்ளுகிறது, எப்பொழுது விபத்துக்கள் நேரிடுகிறது. எப்பொழுது வறுமை, எப்பொழுது தரித்திரம் தாக்குகிறது. எப்பொழுது கடன் பிரச்சனைகள் அலைமோதுகிறது என்று நமக்குத் தெரிவதில்லை. ஆனால் கர்த்தரோ, நமக்கு ஆபத்துக் காலத்திலே அநுகூலமான துணையுமானவர்.

அந்த துணையானவர் உங்களுக்குக் கொடுக்கிற வாக்குத்தத்தம் என்ன? "ஆபத்துக்காலத்தில் என்னை நோக்கிக் கூப்பிடு. நான் உன்னை விடுவிப்பேன். நீ என்னை மகிமைப்படுத்துவாய்" (சங். ரு0:கரு). "என்னை நோக்கிக் கூப்பிடு. அப்பொழுது நான் உனக்கு உத்தரவு கொடுத்து நீ அறியாததும் உனக்கு எட்டாததுமான பெரிய காரியங்களை உனக்கு அறிவிப்பேன்" (எரே. ரு:ரு).

இரண்டாம் உலக போர் நடந்துகொண்டிருந்தபோது, ஜெர்மனி நாட்டு விமானங்கள் லண்டன் மீது குண்டுகளைப் பொழிந்தன. ஒரு விசுவாசி மட்டும் பயப்படாமல் அந்த பதுங்கு குழிக்குள்ளே போய் ஒழியாமல் வீட்டிலே இருந்தார். எல்லோரும் கேட்டார்கள், உனக்கு பயமே இல்லையா? பட்டணமே தீப்பிடித்து அழிந்துகொண்டிருக்கிறது. பாதுகாப்பான இடத்திற்குப் போகவில்லையா? அதற்கு அந்த மூதாட்டி கர்த்தர் என் துணையானவர். ஒருபோதும் அவர் என்னை விட்டுவிலகுவதுமில்லை. கைவிடுவதுமில்லை. நான் ஏன் பயப்படவேண்டும் என்று பதில் சொன்னார். "உன் பக்கத்தில் ஆயிரம்பேரும், உன் வலதுபுறத்தில் பதினாயிரம்பேரும் விழுந்தாலும், அது உன்னை அணுகாது" என்று கர்த்தர் வாக்களித்திருக்கிறார் (சங். கூகை:எ). ஆம், "கர்த்தரின் நாமம் பலத்த துருகம். நீதிமான் அதற்குள் ஓடிச் சுகமாயிருப்பான்" (நீதி. கஅ:க0). உண்மையாகவே கர்த்தர் ஆபத்துக்காலத்தில் உனக்கு அநுகூலமான துணையாயிருப்பார்.

தாவீது ராஜா, தன் வாழ்க்கை முழுவதிலும் கர்த்தரைத் துணையாகக் கொண்டு

இஸ்ரவேல் ஜனங்களை வழிநடத்தினார். அவர் சொன்னார், "கர்த்தரே நமக்குத் துணையும் நமக்குக் கேடகமுமானவர்" (சங். ௩௩ ௨௦). ஆம், தேவ பிள்ளைகளே, கர்த்தர் எப்பொழுதும் உங்களுக்குத் துணையாயிருப்பார். ஆதலால் தீங்கு உங்களை அணுகாது. அவர் துணையாயிருப்பாரானால், பொல்லாப்பு உங்களுக்கு நேரிடாது. வாதை உங்கள் கூடாரத்தை அணுகாது. ஆகவே சங்கீதக்காரனோடு சேர்ந்து, "தேவரீர் என் துணையும் என்னை விடுவிக்கிறவருமாயிருக்கிறீர்" (சங். ௪௦:௧௭, ௭௦:௫) என்று சொல்லி கர்த்தரைப் போற்றிப் புகழுங்கள்.

சத்துருக்கள் எல்லா பக்கமும் நெருக்கின போதும், ஆபத்துக்கள் அருகிலிருந்த போதிலும், தாவீது அஞ்சவில்லை. தேவனே எனக்கு துணை செய்ய விழித்து என்னை நோக்கிப்பாரும்" (சங். ௫௯:௪) என்று சொல்லி ஜெபித்தார். தமிழிலே ஒரு அழகான பாடல் உண்டு. "துணை வேண்டும் தகப்பனே உலகிலே, என்னை எதிர்க்கும் சக்திகள் பல உண்டே". அந்த பாடலைப் பாடும் போதெல்லாம் நீங்கள் கர்த்தருடைய கரத்தைப் பிடித்துக் கொள்ளுங்கள். அவர் உங்களை வாழ்நாளெல்லாம் உங்களுக்கு துணையாக கூடவே வருவார். எல்லாவித அற்புதங்களையும் செய்வார்.

நினைவிற்கு:- "நீர் எனக்குத் துணையாயிருந்ததில், உமது செட்டைகளின் நிழலிலே களிகூருகிறேன்" (சங். 63:7).





*As a prophetic intercessor, my regular prayer time usually involves listening to the Holy Spirit and praying what is on His agenda moment by moment; however, there are a few things I've chosen to pray for every single day. I start my mornings with them and often return to them again before I close my eyes at night.*

*This list has grown over the years, as I have learned and grown. I hope these prayers will encourage you and impact your heart the way they continue to impact mine.*

*Psalm 91*

*He who dwells in the shelter of the Most High abide under the shadow of the Almighty will say of the Lord, "He is my refuge and my fortress, God in whom I trust"'He shall deliver you from the snare of the hunter from the deadly pestilence shall cover you with His feathers, under His wings you shall find protection; faithfulness shall be your shield and wall shall not be afraid of the terror by night, of the arrow that flies by day; of the pestilence that pursues in darkness, of the destruction that strikes at noonday thousand may fall at your side ten thousand at your right hand, it shall not come near you with your eyes shall you behold see th e reward of the wicked. you have made the Lord, who is my refuge, the Most High, your dwelling, shall be no evil befall you, shall any plague come near your tent; He shall give His angels charge over you guard you in all your ways shall bear you up in their hands, you strike your foot against a stone shall tread upon the lion and adder; young lion and the serpent you shall trample under foothe has set his love upon Me, therefore I will deliver him; will set him on high, because he has known My name shall call upon Me, and I will answer him; will be with him in trouble, I will deliver him and honour him. long life I will satisfy him show him My salvation(Ps. 91:1-16).*

*Many years ago, as I was writing my book, Possessing the Gates of the Enemy, I studied about the power of praying Psalm 91. I was particularly struck by outstanding stories I read of God's supernatural protection over soldiers as they recited this psalm on the battlefields of World War I and II.*

*According to a few commentators, some Jewish rabbis believe that this psalm was intended to be read in case of demonic attacks. I have embraced their insight and find myself turning to these words every time it feels like the enemy's activity is increasing.*

*Each day, I pray this psalm over my family members by name, over our home and over our GI staff and their families. I include other people whenever the Lord leads and even extend it to geographic areas at times.*

*Last fall, I was preaching during a time of pretty intense spiritual warfare, but I had become slack in claiming these promises. I ended up falling in Jerusalem and fracturing my foot! It was a sobering reminder to be more diligent, especially in seasons of very important spiritual assignments.*

*The Peace of Jerusalem*

*We are scripturally commanded to pray for the peace of Jerusalem (Ps. 122:6). In fact, there is a promise that those who do so will be blessed and those who do not will be cursed. The Lord loves this important city and wants all of its inhabitants to be safe and blessed.*

*Power for Miracles and Souls*

*"But you shall receive power when the Holy Spirit comes upon you. And you shall be My witnesses in Jerusalem, and in all Judea and Samaria, and to the ends of the earth" (Acts 1:8).*

*This passage promises the power of the Holy Spirit. One day, it occurred to me that, since I long to see a new level of anointing as I minister, I should pray this verse daily.*

*I definitely saw an increase in power as I was faithful to declare these words. In fact, shortly after I started aggressively pursuing the promise, I was in Buenos Aires, Argentina, ministering to the sick, and powerful creative miracles broke out. Metal rods, pins and screws were turning to bone, or God was healing people's bodies so they didn't even need the metal anymore. For instance, people with rods down their backs could suddenly bend and touch their toes. You should have seen the look of joy on their faces!*

*The Prayer of Jabez*

*"Then Jabez called on the God of Israel, saying, "Oh, that You would indeed bless me and enlarge my territory, that Your hand might be with me, and that You would keep me from evil, that it not bring me hardship!" So God granted what he asked" (1 Chr. 4:10).*

*Years ago, after I read The Prayer of Jabez Bruce Wilkerson, I decided to do my own study on this passage. At first, I had a bit of a hard time praying that God would bless me. It seemed rather self-serving and not very humble, but gradually, I realized that*

*if I was blessed, then I could bless many other people.*

*Perhaps the most noticeable shift in my life from this prayer is the amount of favor I have received. Many doors of influence opened for me worldwide, including significant doors with heads of state.*

*The Power to Get Wealth*

*"But you must remember the God, for it is He who gives you the ability to get wealth, so that He may establish His covenant which He swore to your fathers, as it is today" (Deut. 8:18).*

*Theologically, I always believed this verse was for me; I knew that if I had wealth, then I would be able to help establish God's covenant in the earth. But I had never systematically decreed for Mike and me to receive the power to get wealth.*

*Since this is a promise given to God's people under the Abrahamic covenant, I realized I needed to claim it for my life. I started doing this around six months ago, both personally and for the ministry. Since that time, our staff has been moving on a new level of ideas to release blessings to us. I also believe that those who give to Generals International will be blessed as well.*

*These five prayers are not merely ritual or routine. They have become daily bread—God's promises to sustain me through all times and seasons.*

*I am encouraging you to ask God for your own daily bread. What are the promises of God that you need to claim each and every day? You will be delighted at the new level of authority, favor, protection and answers you will receive from Him as you faithfully decree His word over your life.*



# the Praise Tabernacle

Our Address:
5155 Spectrum Way, Unit 7
Mississauga ON, L4W 5A1 Canada.

**Sunday:**

**8:00 AM- Preparation prayer**
**9:15 AM- English service**
**9:30 AM - Sunday School**
**10:30 AM- Tamil/English worship**
**11:30 AM- Youth**

**Cell Meetings:**

**1st Wednesday of the month- Markham**
**2nd to 4th - Tuesday - Mississauga**

**Intercessory prayers:**

**Wednesday @ 10:30 AM - At church**

**Bible study:**

**Thursday @ 7:30 PM- At church**

**Monthly meetings:**

**1st of the month -promise meeting @ 5:00AM**
**1st Saturday of the month fasting prayer @9:30AM**
**2nd Saturday of the month - Women's meeting @ 10:00 AM-12:00 PM**
**3rd Friday of the month - Night prayer @ 10:00 PM - 12:30 AM**

**Further information:**
**416 554 8448 or 647 219 7878**

# துதியின் கூடாரம்

5155, Spectrum Way
Unit 7
Mississauga ON L4W 5A1

# நற்செய்திக் கூட்டங்கள்!

காலம்:
மேமாதம் 5,2017- வெள்ளிக்கிழமை
மாலை 7:30 மணி
மேமாதம் 6,2017- சனிக்கிழமை
காலை 9:30 மணி -உபவாச ஜெபம்
மேமாதம் 7,2017- ஞாயிற்றுக்கிழமை
காலை 10:30 மணி



**செய்தி:**

**சகோதரன் *GPS.* ரொபின்சன்**
**இயேசு சந்திக்கிறார் ஊழியங்கள்**
**ஆவடி, சென்னை.**

**உங்கள் துக்கம் சந்தோஷமாய் மாற,**
**உங்கள் பிணியில் இருந்து விடுபட,**
**சத்தியத்தை அறிந்து நித்திய விடுதலை பெற,**
**அன்புடன் அழைக்கின்றோம்.**

**மேலதிக தொடர்புகளுக்கு:**

**(416)554 8448 Ps. Mano Tharmalingam**
**(647) 219 7878 Bro. Bernard**

*அனைவரையும் அன்புடன் அழைக்கின்றோம்.*
*சத்தியத்தை அறிவீர்கள்,*
*சத்தியம் உங்களை விடுதலையாக்கும்*



# Spark

when the Son of Man comes,

will he find faith on the earth?

Luke 18:8

**Praise Tabernacle**
**5155, Spectrum Way, Unit 7**
**Mississauga ON , L4W 5A1**

**Sunday:**

**8:00 AM- Preparation prayer**
**9:15 AM- English service**
**9:30 AM - Sunday School**
**10:30 AM- Tamil/English worship**
**11:30 AM- Youth**
**6:00 PM - Tamil worship**

**Intercessory prayers:**

**Wednesday @ 10:30 AM**

**Bible study:**

**Thursday @ 7:30 PM**

**Monthly meetings:**

**1st of the month -promise meeting @ 5:00AM**
**1st Saturday of the month fasting prayer @9:30AM**
**2nd Saturday of the month - Women's meeting @ 10:00 AM-12:00 PM**
**3rd Friday of the month - Night prayer @ 10:00 PM - 12:30 AM**